# சீவாஜி

17 நவம்பர் 1957

விலை 6 நயாபைசா

## சமுதாய அபிவிருத்தி



படம் 1 :— ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த கிராமிய இசை, நடன கோஷ்டி யொன்றைப் படத்தில் காணலாம்.

படம் 2 :— ராஜஸ்தானில் உள்ள ஒரு கிராமத்தில் புதிதாகக் கட்டப் பட்ட சமுதாயக் கிணறு ஒன்றில் ஒரு ஹரிஜன ஸ்திரீ தண்ணீர் இறைக்கும் காட்சி.

படம் 3 :— மேற்கு வங்காள கிராமம் ஒன்றில் ஒரு ஹரிஜன ஸ்திரீ எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளும் காட்சி.

சித்தர்கள். •

# "மாணிக்க வாசகர்"

## 2

கே. ஆர். பசுபதி,
அறிவாலயம், கருவூர்.

குளிர்ந்து ஊதும் தும்பி, கொஞ்சும் கிளி. கீதமினிய குயில், மணிமயில், வெள்ளியன்னம் இவைகளின் வாயிலாக வான்பொருளைக் காட்டுவது திருவாசகம்!

ஒளியே இறைவன் என்ற மாபெரும் உண்மையை, ஒளியின் மர்மத்தை, விளக்குவது திருவாசகம்!

"முத்து, மாமணி, மாணிக்கம், வைரம், பவளத்தின் முழுச்சோதி'' என்று அத்தனின் வண்ணத்தைப் பாடுகின்றது திருவாசகம்.

''சுடற்பொற்குன்றம், தோளாமுத்து, சோதி, சுடர், சூழொளி விளக்கு, பரிதிவாழ் ஒளி, தழற்பிழம்பன்னமேனி, இருள்கடிந்தெழு ஞாயிறு'' என்று மேலும் தொடருகின்றது தூய ஒளிக்கு சொன்மாலை சாற்றி!

பவளமால் வரையையும், செந்தாமரைக் காட்டையும் உருவமாக்கி நிறுத்திவைத்தால் புலப்படும் ஒளி உருவமே சித்தனும்! இந்த ஒளிப் பிழம்பையே, "நம் சிவன்'' என்று அருமையுடன் அழைக்கின்றது திருவாசகம்!

பேசுவதற்கு ஒரு லக்ஷியம், பேசும் பொருளுக்கு இலக்கியம் சிவமாம்! அது நல்ல மருந்து பிறப்பறுக்க! மாசில்லாத மணி சிவம்! அவரைப்பற்றிப் பேசுவதே மணி வார்த்தை? மணி வார்த்தை என்பதுவே திருவாசகம் என்பதற்குப் பொருள்! ''மணி வார்த்தை'' சொன்னதினல் மாணிக்க வாசகர்! வெண்பாவைப் பாருங்கள்!

''பேசும் பொருளுக் கிலக்கியமாம் பேச்சிறந்த
மாசின் மணியின் மணிவார்த்தை—பேசிப்
பெருந்துறையே யென்று பிறப்பறுத் தேனல்ல
மருந்தினடி யென் மனத்தே வைத்து.''

திருவாசகம் சாமான்யமான வாசகமல்ல! தேனூறும் திருவாசகம் என்றழைக்கப்படும் பெருமைபெற்றது! ஏன்?

இறைவன், இன்பமாக, இனிப்புப் பொருளாகக் காண்கின்ருர் மணிவாசகர்!

பிறப் பிறப்பென்னும் நோயைத் தீர்க்கும் வலிமை வாய்ந்ததால், 'நல்ல மருந்து' என்கின்ருர் ஒளியோனை!

கற்றவர்கள், ஆராய்ச்சிக்கு ஒரு பிரச்னையாக, சிந்தனைக்குள் சிறந்துள்ள செம்பொருளாகவுள்ளது. "கற்பகக் கனி''யென முக்கண்ணனை விளிக்கின்றது வாசகம்! கடித்துச் சுவைக்கும் கனிகளுண்டு! இருந்தபோதிலும், இந்தக் கனியை விழுங்கவேண்டியுள்ளது! ஆகவேதான், மாத்திரை வடிவத்திலேயே எல்லாவற்றையும் வழங்க விரும்பும், இந்தச் சகாப்த ஆராய்ச்சியாளர்களுக்குத் தேவையைப் பூர்த்தி செய்ய, "கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியே'' என்று கனி ரூபத்தில் தருகின்ருர்!

'தேன்' உடலுக்கு நல்ல மருந்து! ஞானத்தேன் உயிருக்கு நல்ல மருந்து! உடலுயிர் வாழத் தந்ததே தேனூறும் திருவாசகம்! "தேன்'' என்னும் சொல் வெகுவாக விரவியுள்ளது வாசகத்திலே!

ஒளிப் பிழம்பைக் கண்டவர், ஞான வெளிச்சத்தைக் கண்டவர், "ஜோதி விருட்சம்'' என்று சித்தர் சொல்லும் ஒளிமரத்தைக் கண்டவர், அதிலுள்ள பாலையுண்டவர், வாலைக் குமாரர்! ஆகவேதான், சித்தர் வழியிலே சென்ற மணிவாசகர் ஒளியை, ஜோதி விருட்சத்தைச் சொன்னதுவும், ஜோதிப்பாலையும் பேசுகின்ருர்! பாடலைப் பார்மின்!

''தேனைப் பாலைக் கன்னலின் தெளியை
ஒளியைத் தெளிந்தார் தம் ஊனை
உருக்கும் உடையானை''

முற்கூறிய பாடலிலே ஒளியெனப்படும் "ஜோதிமரத்தையும்'' அதில் வரும் அமுதத்தையே தேனக, பாலாக, கரும்புச்சாருக, சாறின் சாரமாகச் சொல்லி அதையுண்டு அறிவிலே தெளிந்தார் அடையும் பயனை விளக்குகின்ருர்! ஊன் எனப்படும் ''பருவுடல்'' பிரணவ உடலாந, ஒளியுடலாகப் பக்குவப்படுகின்றது என்பதையும் சொல்லுகின்ருர்!

சிவன் கையிலே ஒரு ஓட்டினைக் காணலாம்! சிவப்பாதையிலே செல்வோரின் வினைகளை உவப்புடன் அதில் பெற்றுக்கொள்கின்றதாம் சிவம்! வாழ்வை சுவையுள்ளதாக்குகின்றதாம்! பாரதி "முன்னைவினைப் பயன்கள் யாவும் மூளாதழிந்திடல் வேண்டும்; என்னைப் புதிய உயிராக்கி, எனக்கேதும் வேலையறச் செய்து, என்னைச் சந்தோஷங் கொண்டிருச் செய்வாய்'' என்று மீனுக்ஷியை, பவானியை, வாலையை, பராசக்தியைப் பேரார்வமுடன் கோருகின்ருர்! நமது மாணிக்கவாசகர் காட்டும், முக்கண்ணப்பன், முழுமுதல், முதற்சோதி, முதல்வித்து, பித்தன், சித்தன், பிறைசூடியானை'' சொல்லும் பாட்டையும் படியுங்கள்!

''ஊனை நின்றுருக்கி என்
வினையை ஓட்டுகந்து
தேனையும் பாலையும் கன்னலையும்
ஒத்தினிய கோன்.''

தேன் என்பது வானத்தேன். பால், என்பது மதிய முதப்பால்! கரும்பு என்பின். ஞானக்கரும்பு கோன், என்பது ஆயிரமிதழ்த் தாமரையிலே இலங்கும் கருமுத்துத் தியாகராஜன்! ஞான நடத்தரசன்! தில்லை மூதூராடிய நடமாடி!

(11-ம் பக்கம் பார்க்க)

# மனப்பிராந்தி

(ராதிகா)

ஆலையில் இரும்புச் சக்கரங்களிடையே பேசிப் பேசிப் பழகிவிட்டு களைப்புடன் திரும்பிவந்து வந்துகொண்டிருந்தான் கந்தன். வேலை செய்து செய்து உரமேறிய உறுதியான கைகள் அன்று ஏனோ சோர்ந்துவிட்டன. எல்லாருக்கும் விடுமுறை உள்ளதுபோல் தனக்கும் வேண்டுமென முறையிட்டதோ என்னவோ! களைப்புடனும் அலுப்புடனும் அவன் வந்து படுத்துக்கொண்டான்.

தாயார் மிக அக்கறையுடன் அவன் அருகில் வந்து அவன் நெற்றியைத் தொட்டுப்பார்த்ததும் கண்ணைத் திறந்தான்.

“என்னப்பா கந்தா” உடம்பு சுகமில்லையா? என்ன பண்ணுது? ஏதாச்சும் கசாயம் வைச்சுத்தரவா?” அது பாசமிக்க அன்னையின் கேள்வி.

“எனக்கு உடம்பு ஒண்ணுமில்லே, நீ போய் உன் வேலையைப் பாரு” சிடுசிடுப்புடன் பதிலளித்தான் மகன்.

“அட என்ன கந்தா ஒரு மாதிரியா இருக்கே! இன்று சோமவாரமில்லையா? கோயிலுக்குப் போய்வா, திங்கள் கிழமை வந்திருச்சுனா நீ இப்படி சோர்ந்து படுக்கிற வழக்கமாயிடுச்சு? ஏனுன்னு புரியலே. சாமி குத்தமாயிருக்குமோ என்னவோ”....என்று கூறுவதற்குள்,

“அம்மா!....நீ சும்மா போகமாட்டே! இல்லையா நான் எங்காவது ஓடிப்போயிடுவேன். என்னைத் தொந்தரவு செய்யாமே இருந்தா படுத்தாவது இருப்பேன். இல்லையானா நீ உன் மவனை இனிமே கண்ணாலே பார்க்கவே முடியாது ஆமாம்” என்று கடுமையான குரலில் கூறினான் கந்தன். அவ்விடத்தை விட்டு வருத்தத்துடன் மறுமொழி புகலாது அகன்றாள் தாய்.

கண்ணை இறுக்க மூடிய கந்தன் படுக்கையில் தூங்கவும் முடியாமல் விழித்திருக்கவும் இயலாமல் புரண்டான் கந்தன். அவனையறியாமலே சில கணம் கண்மூடினான்.

“ஹா....ஹா....ஹா....கந்தா! என்னை ஏமாத்திவிட்டாயே! பெண்ணுக்காக என்னைக் கொலை செய்தாயே! நீயாவது சுகம் அடைந்தாயா? பதில் சொல்லு! அகந்தை பிடித்தவனே! அகங்காரத்தின் சின்னமே! கேவலம் பெண்ணையால் நண்பனைக் கொலை செய்தாய்; நீயாவது உன் ஆசைப்படி பூவாயியை மணந்தாயா! அவளையும் கொலை செய்துவிட்டாயே! என்ன துணிச்சல் உனக்கு?”

“வேலு....வேலு....பூவாயியை நான் கொல்லவில்லை. உன்னை...வஞ்சகமாய் மாய்த்தது உண்மை....என்னை மன்னித்துவிடு...வேலு...மன்னித்துவிடு....”

“மன்னிப்பா! உனக்கா!.... ஹ....ஹ... ஹ....ஹ....அனுபவி ....மமதை பிடித்தவனே உனக்கு மன்னிப்பா....முடியாது அனுபவி...நல்லா அனுபவி!

வேலு!....வேலு!....” என்று உளறிய குரல் கேட்டு ஓடிவந்தாள் கந்தனின் தாய்.

மறுகணம் “ஆவென்று அலறும்படி கந்தன் கயிற்றுக் கட்டிலிலிருந்து கீழே விழுந்திருந்தான். கட்டிலினடியில் உள்ள கடப்பாரை, மண்வெட்டி முதலியவைகளில் அடிபட்ட அவன் தலையிலிருந்து ரத்தம் பெருகிக் கொண்டிருந்தது.

மகனின் நிலை கண்டு கதறினாள் அவள். அக்கம் பக்கம் உள்ளவர் உதவியுடன் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்ட கந்தன் சுய நினைவு வரவே இரண்டு தினமாகியது.

கந்தன் தூக்கத்தில் சதா வேலு....என்னை மன்னிச்சுடு—மன்னிச்சுடு” என்று உளறுவதைக் கேட்ட டாக்டர் அது பற்றி அறிந்து தகுந்த வைத்தியம் செய்ய எண்ணினார். ஆம்......கந்தன் திடிரென்று புத்தி மாறுவதுபோல் சில சமயம் விழித்திருக்கையிலும் உளறியது கண்டு டாக்டர் மனம் அவன் நிலைபற்றி அறிய விரும்பியது. அதுமட்டுமல்லாமல் தன்னுடைய வேலைக்கார ராமன் கந்தன்பற்றி மிக கவனமாகப் பார்க்கும்படியும் எப்படியாவது அவனைப் பிழைக்கச் செய்யும்படி கேட்டுக்கொண்டதன் மர்மம் அறியவும் விரும்பியது அவர் உள்ளம்.

வேலைக்காரனிடம் ஒருமாதிரியாக கூறிய விஷயங்களைப் புரிந்துகொண்ட டாக்டர் கந்தன் அருகில் வந்து சாவகாசமாக அமர்ந்தார். சுயபுத்தியுடன் கந்தன் இருந்ததால் டாக்டருக்கு சரியான படி விடை அளிக்க அவனால் முடிந்தது.

முதலில் தன்னைப் பற்றிக் கூற மறுத்த அவன் டாக்டரிடம் ஏற்பட்ட பிரியத்தாலும் நம்பிக்கையாலும் தன் கதையைக் கூற ஆரம்பித்தான்.

“நானும் வேலுவும் பஞ்சாலையில் ஒன்றாய் வேலை செய்தோம். அவனும் நானும் உயிர் ஒண்ணு உடல் இரண்டுமாக இருப்போமுங்க, அத்தனைப் பிரியமா இருந்திட்ட எங்களுக்குள்ளே பிளவுபடுத்தத் தாங்க அந்த பெண்ணாசை என்னை பிடிச்சுதுங்க....என்று விம்மின கந்தனை” தேறுதல் கூறிய டாக்டர் மேலும் கூறும்படி சொன்னார்.

“பூவாயி என் மாமன் மகள். நல்ல அழகு. வேலுவும் நல்ல சிகப்பா மூக்கும்-முழியுமா இருப்பானுங்க, பூவாயியை கண்ணாலம் கட்டிக்கிட எனக்கு ஆசையிருந்திச்சி! வேலுவும் பூவாயிக்கு சொந்தக்காரன் தாங்க; அவ எங்க இரண்டுபேருகிட்டவும் நல்லா சிரிச்சு சிரிச்சு பேசுவாங்க; ஆனா அவ யாரைக் கட்டிக்கிட ஆசைப்படரா என்று தெரியாதுங்க. ஒருநாள் வேலுவோட அவள் சிரிச்சு சிரிச்சுப்பேசிய படி பூக்குடலையுடன் கோவிலுக்குப் போய் வரதைப் பார்த்ததும் எனக்கு ஆத்திரம் வந்துவிட்டது. வேலுவுடன் நான் ஒருநாள் தனியா ஆத்துப்பக்கம் போகிறபோது அவள் எதிர்பாராம இருக்கிறபோது மூங்கில்மேல் நடந்து வந்த அந்த சமயம் வேலுவை ஆற்றில் தள்ளி விட்டுட்டு திரும்பிப் பார்க்காம ஓடியாந்துட்டேன். மனது “படக் படக்” என்று அடித்துக்கொண்டது. அன்று முதல் மூணு நாள் ஜுரத்துடன் படுத்திருந்தேங்க. அதற்கிடையிலே பூவாயி வேறு என் வீட்டுக்கு வந்து வேலு எங்கே காணலேன்னு விசாரிச்சுது. நான் எனக்குத் தெரியாது என்று சொன்னதும் பூவாயி அழுதிச்சு பாருங்க; டாக்டர் அய்யா; என் மனது பின்னால் தாங்க நான் செய்தது தப்புனு தோணிச்சு. பூவாயிக்கு வேலு மேலே ஆசை அவ்வளவு இருக்குமுனு தெரியாது அவனை கொலை செய்தது எத்தனை பிசகு என்று வருத்தம் ஏற்பட்டது. ஆனால் அதைக் காட்டிக் கொடுக்க விரும்பாததால் பூவாயியை ஏதோ சாக்கு சொல்லி அனுப்பித்து விட்டேங்க. பிறகு சற்றுகூட தூக்கமே வராம பயம் பிடிச்சு ஆட்டிக்கிட்டிருந்தது.

மறுநாள் பூவாயியிடம் சொல்லி மன்னிக்க வேண்டிக்கிட எண்ணி அவவூட்டுக்கு

(7-ம் பக்கம் பார்க்க)

# எதிரொலிகள்

(வா. கோ. பா.)

ஆண்டுதோறும் தீபாவளியைத் தமிழகம் சிறந்த இலக்கியச் சுவைதரும்—உண்மையொளிவீசும், தின்பண்டம்—பட்டாசு வகைகளுடன் தீபாவளி மலர்களால் வழிபட்டு வருகிறது. இந்த வருடம் நான் படிக்க முடிந்த மலர்களில் என் கருத்தில் பதிந்தவை இவை.

"கௌதமபுத்தர் கடவுளைப் பற்றி விவாதம் வேண்டாம் என்று சொன்னதை மக்கள் கடவுளே இல்லை என்கிற அளவுக்குக் கொண்டு போய்க் கெட்டுப்போனார்கள்."

ராஜாஜி கல்கி மலர்

புத்தர் ஒரே ஒரு ஆட்டின் உயிரை மட்டும் அந்தணரிடமிருந்து பாதுகாக்க முயன்று அறிவுரை வழங்கினர். அவருக்கு ஆயிரமாயிரம் ஆடுகள் மனிதர்களின் வயிற்றினுள் புதைவதும், கான்பூர் போன்ற தோல் விற்பனை கேந்திரங்களில் இளங்கன்றுகள் பலியாகிப் பொருளாதாரத்தை உயர்த்துவதும் எப்படித் தெரிந்திருக்க முடியும், முடியாதல்லவா?

∴ ∴

"சில மாதங்களுக்கு முன்பு தமிழ்ப் பண்பாட்டைப்பற்றி புதுக்கோட்டை டவுன் ஹாலிலே ஒரு புலவர் சிகாமணி மேடைமேலேறிப் பேசினர். பரீக்ஷை எழுதி டாக்டர் பட்டம் பெற்ற தமிழ்ப் புலவர் அவர். "டிகேசி" போய்விட்டார்; இனிமேல் தமிழ்ப் பண்பாட்டுக்கும் தமிழுக்கும் யோகந்தான்" என்று அவர் கர்ஜித்தார். புலவர் நல்லவர் தான்; ஆனல் உண்மைப் பண்பாட்டை அறிவது அவ்வளவு கஷ்டமாக இருக்கிறது அவருக்கு.

[எஸ். மகராஜன் கல்கி மலர்]

அமர லோகத்தில் மகாகவி பாரதியாரை டி. கே. சி. யும் கல்கியும் சந்தித்து அவர் பாடிய பாடலில் "காப்பியம்" என்ற பிழை திருத்தம் பற்றிப் பேசியபோது பாரதியார் கடகடவென்று சிரித்தார்.

∴ ∴

"எல்லாரும் பக்தியுடன் வழிபடும் இவர் (கணபதி) நேபாளம், திபேத், துருக்கிஸ்தான் முதலிய நாடுகளிலும் கடல் கடந்து சுபத்ரா, ஜாவா, பாலி, போர்னியோ, சயாம், இந்தோசீன, சீன, ஜப்பான் ஆகிய நாடுகளிலும் . மெக்ஸிகோ போன்ற மேலைத் தேசங்களிலும் குடியேற்றப்பட்டு மக்களால் வழிபட்டு வந்தார்"

—வை. மு. நரசிம்மன்
(கல்கி மலர்)

"என்ருலும் தென்னிந்தியாவில் —தமிழகத்தில் —பிள்ளையாருக்குள் என்ன இருக்கிறது?" என்பதையறியும் தவிப்பு ஏற்பட்டதைப்போல் வேறுஎங்குமே ஏற்படவில்லை!

∴ ∴

"மனிதனுடைய முன்னேற்றத்துக்கு அறிவு வளர்ச்சி எவ்வளவு தேவையோ, பொருள் உற்பத்தி எவ்வளவு அவசியமோ அவற்றைவிட மிக அவசியம் ஆத்மீக வளர்ச்சி"

[—சி. சுப்பிரமணியம்
கலைமகள் மலர்]

எனவே அறிவு வளர்ச்சிக்கும் பொருள் உற்பத்திக்கும் நாம் வழி வகை செய்ய இயலாமைக்கு வருந்துகிறேம்.

∴ ∴

"புத்தகங்களை நிறையப்படித்தவர்களின் மனத்தில் அகங்காரம் அதிகமாகி அவர்களிடம் தற்பெருமையும், படித்த பிறரிடம் பொருமையும் உண்டாகின்றன. அவற்றினுல் அறிவு மங்கிச் சமாதானம் அழிந்து எந்தக் கீழ்த்தரமான காரியத்தையும் செய்யத் தலைப்படுகிருர்கள்."

—தி. சு. அவினாசிலிங்கம்
(கலைமகள் மலர்)

மாஜிக் கல்வி மந்திரி என்பதை மறக்கவில்லை நாம்.

∴ ∴

"நாவற்பழ நிறமும் கரும்பு பார்டரும் உள்ள பட்டுப் புடவை செக்கச் சிவந்தமேனியும் இனிய பேச்சும் அமைந்த பெண்களுக்கு மிகவும் எடுத்தது."

—தினமணியில் 'மகரம்'

"....ஆகையால் இனி அமுதமான கதைகள் எழுதும் பிரபல (?!!) எழுத்தாளர்களைத் தயவுசெய்து தங்கள் கதாநாயகிகளுக்கு இதே புடவையை அணிவிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்!"

∴ ∴

"பொதுவாகப் பண்டிகைகள் எல்லாம் சமயங்களின் பெயரால் புராணங்களின் பெயரால் கொண்டாடப்படினும் அந்தப் பண்டிகைகளைத் தொடங்கி வைத்ததற்குக் காரணம் பொருளாதாரம் தான்!"

—ம. பொ. சி
தமிழ்நாடு தீபாவளி இதழில்

"பண்டிகைகள் கொண்டாடுவதை எதிர்க்கிறவர்கள் கூட இப்படி (எதிர்ப்புக்குரல் கொடுக்கும் விசேஷக் கட்டங்கள் மூலம் தங்கள்) பொருளாதாரநிலையைச் சரி செய்யத்தான் முயற்சிக்கிருர்களோ என்னவோ!"

∴ ∴

"தமிழ் வாசகர்கள் விழித்துக்கொண்டு விட்டார்கள். புதுவிதமான சிறுகதைகளைப் பத்திரிகைக்காரர்களிடம் அவர்கள் கேட்கிருர்கள். பத்திரிகையாளரும் எழுத்தாளர்களின் பக்கம் திரும்பிப் பார்க்கத்தொடங்கியிருக்கிருர்கள்"

—'அகிலன்'
தமிழ்நாடு தீபாவளி இதழ்.

"இரவுக்குப்பின் பகலும் விழிப்புக்குப் பின் தூக்கமும் சகஜம்தான்."

∴ ∴

"எல்லோரும் எஜமானராகிவிட்டால் ஊழியம் புரிவது யார்? பல்லக்கைத் தூக்க ஆள் வேண்டாமா? இந்தக் கேள்விதான் இன்று வாழ்க்கையில் தொக்கி நிற்கிறது?"

—ஸி. எஸ். நரசிம்மன்
மித்திரன் தீபாவளி மலர்

"ஏழை என்றும் அடிமை என்றும் எவரும் இல்லை ஜாதியில், இழிவு கொண்ட மனிதரென்பர் இந்தியாவில் இல்லையே!"

∴ ∴

"பாட புத்தகங்களைப்பற்றி எவ்வளவோ சொல்லுகிருர்கள். ஆனல் அவை இல்லாதது எனக்கு ஒரு குறையாய்ப்படவில்லை....கட்டுக் கட்டாகப் பாட புத்தகங்களைக் குழந்தைகளின்மீது சுமத்துவது அவசியம் என்றே எனக்குத் தோன்றவில்லை. உண்மையான பாட புத்தகம் ஆசிரியர்தான் என்பதே என் எண்ணம்."

—காந்திஜி கதிர் மலர்.

"ஆண்டுதோறும் பாட புத்தங்களின் பெயரையும் அட்டைப் பகுதியையும் புதுப்பித்து வருகிறவர்களின் ஆத்மாவுக்குச் சாந்தி கிடைக்குமா?"

∴ ∴

(9-ம் பக்கம் பார்க்க)

தொடர்.

# எங்கிருந்தோ வந்தான்

## நாடக மேடையில்

**திரை எழுந்தது.**

மன்னன் மந்திராலோசனை மண்டபம்.

பிரதானிகளுடன் அரசன் அந்தரங்க ஆலோசனை நடத்தும் காட்சி.

ஒற்றர்கள் கொண்டு வந்த சேதி மந்திராலோசனைக்கு ஆதாரம்.

மன்னன் நல்லவேந்திரன் பேசினான்.

தொன்றுதொட்டு பெருமையும் புகழும் கொண்ட பட்டிப்பதி ராஜ்யத்தில் பாகம் என்பதே இல்லாமல் நாட்டு நலன் கருதி மூத்தவர் ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்துவது அரசர்குல சம்பிரதாயமாக அனுசரிக்கப்பட்டு வருகிறது.

இன்று எனது சகோதரன் இந்நாட்டை இரு கூறுக்கி ஒரு பாகத்தில் தன் ஆட்சியைப் ஸ்தாபிக்க விரும்பி பவள நதியின் வடபாகத்தில் உள்ள பகுதியைக் கைப்பற்றி இருப்பதாக ஒற்றர்கள் செய்தி தருகிறார்கள்.

நெருக்கடியான இந்த தருணத்தில் ராஜதந்திரிகளாகிய நீங்கள் நாட்டுக்கும், எனக்கும் நல்ல வழிகாட்ட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். (என்றான் அரசன்)

**சேனாதிபதி.** மன்னா! நின் உத்திரவு ஒன்றை அன்றி வேறு எதையும் பற்றி எனக்குச் சிறிதும் கவலையில்லை, உத்திரவு ஒன்றையே எதிர்பார்க்கின்றேன்.

**பகுதித் தலைவன்.** நாட்டுத் தலைமையேற்ற நல்லவேந்திரா! இந்தச் செயல் பட்டிப்பதி ராஜ்யம் சிதறுண்டு போவதற்கு வழிகோலுவதாகும். எனவே இதனைத் தடுத்து நிறுத்துவது ஒவ்வொரு பிரஜையின் கடமை என நான் மதிக்கிறேன்.

**அமைச்சர்.** அரசே! தங்கள் சகோதர வாஞ்சை நாடு அறிந்ததே. சகோதரன் என்பதற்காக இதனை அனுமதித்தால் நாசகாலம்தான் நாட்டுக்கு. போர் முரசு கொட்ட உத்தரவு தாருங்கள்.

**நாட்டாண்மைக்காரர்.** பிரபோ! சம்பிரதாயத்தை மீறி, மன்னர் பரம்பரையில் ஒரு புல்லுருவி முளைப்பதை நாட்டு மக்கள் சகியார். உயிர் கொடுத்தேனும் அரச பரம்பரையின் கௌரவத்தைக் காக்க நாட்டு மக்கள் திடசித்தம் கொண்டிருக்கிறார்கள் உத்தரவு தாருங்கள்.

**அரசன்.** அனைவரும் அரச பரம்பரையின் அந்தஸ்திலும்' என்னிடம் இருக்கும் அன்பிலும் அபிப்பிராயம் தந்தீர்கள். மெத்த நன்றி. போருக்கு சித்தமாக்க நாட்டு மக்களை தயார் படுத்துங்கள். இதுவே என்னுடைய முடிவு.

**அமைச்சர்.** அரசே! அரண்மனைப் புலவர் ஏதும் சொல்லாமல் மௌனம் சாதிப்பதின் காரணம் சபை அறியலாமோ?

**அரசன்.** புலவர் பெருமானே! தாங்கள் அபிப்பிராயம் ஏதும் கூறாமல் இருக்கலாமோ? தங்கள் கருத்தை சபை அறிய தெரிவிக்கவேண்டும்.

**புலவர்.** நல்லவேந்திரா! சபையின் முடிவுக்குப் பின்னர் என் கருத்தை அறிய விரும்புவது சம்பிரதாயத்துக்கு ஒத்ததல்லவே!

**அரசன்.** மனிதன் அபிப்பிராயத்திற்கு அடிமை அல்ல. எதையும் ஆர அமர ஆலோசிக்க முன்னைய முடிவு தடையுமல்ல. தங்கள் கருத்து எதுவாயினும் தைரியமாக வெளியிடலாம். சபை புனராலோசனை செய்யும்.

**மன்ன!** தமிழகத்தில் தோன்றிய எத்தனையோ போர்கள் தமிழ் புலவர்களால் சமரசம் செய்யப்பட்டிருக்கிறது என்பதை நாடும் தாங்களும் அறியாததல்ல. போருக்கு அஞ்சுபவர்கள் புலவர்களும் அல்ல. ஆனால்!

**மன்னன்.** ஆனால் என்ன? தெரிவியுங்கள்.

**புலவர்.** என் கருத்தல்ல, தமிழ்க் கருத்து இது. எங்கிருந்தோ இங்குவந்து செந்தமிழ் மக்கள் சிந்தனைக்குத்தூண்டுகோலாக இருந்த செம்மல், தர்மபுத்திரனைப்பற்றி, பாரதப்போர் பற்றிக் கூறிய கருத்துக்கள். சபையும் தாங்களும் கேட்கவேண்டும்.

"பொறுமையினை அறக் கடவுள் புதல்வனென்னும்
யுதிட்டிரனு நெடுநாளில் புவிமேற் காத்தான்
இறுதியிலே பொறுமைநெறி தவறிவிட்டான்
ஆதலால் போர் புரிந்தா னிளையாரோடே
பொறுமையின்றிப் போர் செய்து பரதநாட்டைப்
போர்களத்தே அழித்துவிட்டுப் புவியின் மீது
வறுமையையுங் கலியினையும் நிறுத்திவிட்டு
மலைமிது சென்றான்பின் வானஞ் சென்றான்."

இது தமிழ் கூறும் முடிவு. தர்மபுத்திரனுக்கே ஏற்பட்ட பழி, இது தங்களுக்கும் தேவையா? என்னைத் தூது அனுப்புக, சகோதர சண்டை வேண்டாம். நாட்டு மக்கள் உயிர் பலியிட நான் விரும்பவில்லை சமரசம் காண்போம். தமிழ் வழி காட்டும்.

**அரசன்.** அங்ஙனமே ஆகட்டும். சபையோர் என்ன நினைக்கிறார்கள்.

**சபையினர்.** புலவர் சொற்படி புதுமைப்பாதை வகுப்போம். தமிழ் காட்டும் பாதையில் சகோதர சண்டை தீரட்டும்.

**அரசன்.** சபை கலையலாம்.
திரை விழுந்தது.



ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஒலி 22] 17-11-57 [வாரம் 50


# தமிழ் கூறும் நல்லுலகு

தமிழகத்தில் தமிழ்மொழி அரசாங்க நடைமுறைக்குரிய மொழியாக வந்துவிட்டது. நெடுங்காலத்துக் கனவு இன்று நனவாக மலர்ந்திருக்கிறது. ஒரு சில ஆண்டுகளில் இம்மாறுதல் நமக்கு இயல்பாகிவிடும். தமிழ் தழைத்தினிதோங்கும்.

கல்லூரிகளில் பயிற்றுவிக்கும் மொழியாகவும் தமிழைக் கையாளவேண்டுமென்ற ஆர்வமும் செயலாக மாறி வருகின்றது, இதற்கேற்ற முறையில் இருபது விதமான பாடங்களைத் தெரிந்து எடுத்துஅவற்றில்தமிழ்ப் புத்தகங்களை வெளியிடுவதென்றுஅரசினர்முடிவெடுத்திருக்கின்றனர். இது விரைந்து செயலாற்றப்படுமென்று எதிர்பார்க்கலாம்.

"தொழில் இயல், சட்டம், மொழியியல், விஞ்ஞானம் போன்ற கலைகளைப் பயிற்றுவிக்கத் தக்க தமிழ் நூல்கள் இல்லை. இவற்றைப் போதிக்க இன்று ஆங்கில மொழியே வாய்ப்பாக இருக்கிறது. ஏனெனில் அந்த மொழியில் தான் இக்கலைகள் பற்றிய அரிய பெரிய ஆராய்ச்சி விவரண நூல்கள் மலிந்திருக்கின்றன. எனவே ஆங்கிலமே கல்லூரிப் பயிற்சிக்கு ஏற்ற மொழி"யென்றநம்பிக்கையே இதுகாறும் இருந்து வந்திருக்கிறது.

உயர்நிலைப் பள்ளிகளில் முற்றும் தமிழ் என்ற வழக்கம் நடைமுறைக்கு வந்துவிட்ட பிறகு, கல்லூரியில் அனைத்தும் ஆங்கிலமென்ற ஏற்பாடு, மாணவர்களுக்குப் பெருஞ் சோதனையேயாகும். எனவே கல்லூரிகளில் நுண்கலைகள் யாவும் தமிழில் கற்பிக்கத்தக்க நூல்கள் தயாரிக்க அரசினர் முன் வந்திருப்பது விரும்பி வரவேற்கத் தக்கதொரு அருஞ்செயல்.

நூல்களை மட்டும் அன்றி, அவற்றைக் கற்பிக்கும் திறமையுள்ள ஆசிரியர்களையும் தயாரிக்க அரசினர் முன்வந்திருப்பது மிகவும் இன்றியமையாததாகும். பழம் பெருங் கல்விமான்கள் சிலர் இந்த மாறுதலை எதிர்க்கிறார்கள். இவர்களின் அச்சம் பொய்யாகி, தமிழ் வளமார்ந்த-வாய்ப்பான மொழி என்ற உண்மை விளங்கும் நாள் வந்துவிட்டது. வாழ்க தமிழ், வளர்க தமிழ்க்கலை.

## பஞ்சாயத்து

கிராமப் பஞ்சாயத்துக்களை வலுப்படுத்துவதே நவ இந்திய நிர்மாணத்துக்கு ஒரே வழி என்ற உண்மை நீண்டகாலமாகவே உணரப்பட்டு வந்திருக்கிறது. இப்பொழுது தமிழகத்தின் பஞ்சாயத்துக்களின் எண்ணிக்கை பெருகிக்கொண்டிருக்கிறது. ஜில்லா போர்டுகள் ஒழிந்து போவதன் காரணமாகப் பஞ்சாயத்துக்களின் பொறுப்புக்கள் விரிவடைகின்றன.

பஞ்சாயத் அங்கத்தினர்களைப் போலவே, தலைவரையும் வாக்காளர்களே நேரிடையாகத் தேர்ந்தெடுத்து வருகிறார்கள். இதனால் தலைவரின் அந்தஸ்தும் பொறுப்பும் நேரிடையே மக்களுடன் சம்பந்தப்பட்டதாக இருந்து வருகிறது. இனி பஞ்சாயத் அங்கத்தினர்களே தங்களில் ஒருவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம் என்ற மாறுதல் உண்டாகிறது. இந்த மாறுதல் பஞ்சாயத்துக்களைப் பலவீனப்படுத்தி, ஜில்லா போர்டு தலைவர் பதவியைப் போல, வீண் தாட்சண்யங்களுக்கு தலைவரை இரையாக்கிவிடும், கிராம நிர்வாகப் பொறுப்பை விட, தமது தலைமைப் பதவிக்கு ஆதரவாளர்களின் முகமலர்ச்சியே பஞ்சாயத் தலைவரின் குறிக்கோள் ஆகிவிட இடம் உண்டாகிவிடும். தவிர, பதவிக்காலம் 5 ஆண்டுகளாக உயர்த்தப்படுகிறது ஜில்லா போர்டு ஒழிந்துவிட்டாலும் பஞ்சாயத்துக்கள் குட்டி ஜில்லா போர்டுகளாகிவிடக்கூடிய துர்ப்பாக்கியம் வந்திருக்கிறது என்பதைத் தான் காண்கிறோம்.

—

# ரேடியோ நாடக விழா

*திருச்சி ஆல் இந்தியா ரேடியோ நவம்பர் 16-ந் உ முதல் ஒரு வார காலத்திற்கு நடக்கவிருக்கும் நாடக விழா ஒன்றிற்கு ஏற்பாடு செய்துள்ளது.*

*விழாவின்போது ஒலிபரப்புவதற்கென ஏழு நாடகங்கள் சேர்க்கப்பட்டுள்ளன.*

***முதல் நாள்:*** *16—11—57 இரவு 7-30 முதல் 8-30 வரை "சுரயு என் சகோதரி". ஸ்ரீரங்கம் நரசிம்மன் எழுதியது. தன் வாழ்வை வளமாக்கக்கூடிய ஒரு இளைனுக்குத் தனது சகோதரியை மணம் செய்விக்க சிபாரிசு செய்வதாக வாக்களித்த ஒரு பெண்ணின் பெருமையைச் சித்தரிக்கின்றது இந் நாடகம். 17—11—57 இரவு 9-15 முதல் 10-15 வரை. "மயன் மகள்". கே. சி. தியாகராஜன் எழுதியது, ராமாயணத்தின் முக்கிய கதாபாத்திரங்களில் ஒருவரான மண்டோதரியின் உருக்கமான கதையைச் சித்தரிக்கின்றது, இந்நாடகம்.*

*18—11—57 "உயரும் உழைப்பாளி" என்ற நாற்பத்தைந்து நிமிட நாடகத்தைக் கேட்கலாம். ப. கண்ணன் அவர்கள் எழுதிய சமுதாய முன்னேற்றத்தைக் குறிக்கும் ஒரு நாவல்.*

*19-11-57 இன்று "காதல் பலி" என்ற* Satirical Play *ஒலி பரப்பப்படும். எழுதியவர், பி. கணபதி சுப்ரமணியம்.*

*20—11—57 சரித்திர வீரன் சடைக்கனது வாழ்க்கைச் சித்திரம் "வீரன் சடைக்கன்" என்ற தலைப்பின் கீழ் இன்று இரவு 7-30 மணிக்கு ஒலிபரப்பப்படவிருக்கிறது. எழுதியவர் டி. எம். சி. ரகுநாதன்.*

*21-11-57 தன்னை வெல்ல நினைக்கும் வாழ்க்கைப் போராட்டங்களினால் குழப்பப்பட்ட ஒரு வாலிப மேதையின் மனச்சிக்கல்களைச் சித்தரிக்கும் கதையை இன்றிரவு 9-15 மணிக்குக் கேட்கலாம். "எல்லென்" எழுதியது.*

*22—11—57 பொது நல சேவை செய்யத் தூண்டப்பட்ட மனம் புகழ்ச் சிறையில் வாடுகின்றது. இந்த ஆதாரத்தில் பின்னப்பட்ட ஒரு நடிக நக்ஷத்திரத்தின் கதையை இன்று இரவு "புகழ்ச் சிறை" என்னும் தலைப்பில் கேட்கலாம். எழுதியவர் சாவித்ரி ராமலிங்கம்.*

(3-ம் பக்கம் தொடர்ச்சி)

ஓடினேன். வீடு பூட்டிக்கிடந்திச்சு. அவ மாமனும் அந்த பூவாயியைக் காணும அன்னிக்கு ராவே அழுதுகிட்டு எங்கோ போனதாக தகவல் கிட்டியதும் எனக்கு தூக்கி வாரிப்போட்டது. இரண்டு கொலை செஞ்சுட்ட பாவி என்று என் மனதே குத்தி குத்தி காட்டுதுங்க. நான் எப்படி நிம்மதியாயிருக்க முடியும்! ஏஞ்சாமி! என்னைப் பிழைக்க வைச்சீங்க; அவங்க இரண்டு பேரும் போயி நான் எதுக்கு இந்த உயிரை வைச்சுக்கிட்டிருக்கணும்'' என்று தேம்பித்தேம்பி அழ ஆரம்பித்தான்.

டாக்டர் அவரால் முடிந்த வரை அவனுக்கு சமாதானம் கூறியபின் சற்று ஆறுதல் பெற்ருன் கந்தன்.

''கந்தா! நீ வேலுவைக் கொலை செய்துவிட்டேனே என்று இப்போ வருத்தப்படுகிருயே! அவனும் பூவாயும் உயிருடன் இருந்தால் என்ன செய்வாயோ! என்னமோ வீணாய் ஏன் கவலைப்பட்டு மனதை அலட்டிக்கிறே!''

''டாக்டரய்யா! அப்படிச் சொல்லாதீங்க; பூவாயி அன்னைக்கு அழுத உடனேயே மனம் மாறிடுச்சு. அப்போதே வேலு இருந்திருந்தா நானே கண்ணாலத்தை முடிச்சு வைச்சிருப்பேன். ஹூம்........இனி என்ன பண்றது....பாவிநான் தானே கொன்றேன்'' என்று கந்தன் மீண்டும் கண்ணீர் விடத் தொடங்கினன்.

''இப்போது வேலும் பூவாயியும் வருவாங்கபார்'' என்ற டாக்டரைப்பார்த்த கந்தன்'' என்னங்க! என்னை ஏமாத்தப் பார்க்கிறீங்களே! செத்தவங்க....''என்று சொல்லும் போது

''கந்தா....கந்தா....நீ வேலுவைக் கொல்லல்லை. இதோ உசிரோடு இருக்கேன்'' என்றபடி ராமுஓடோடி வந்து கந்தனின் கரத்தைப்பிடித்துக் கொண்டான்.

அவனையும் உடன் வந்த பூவாயியையும் கண்ட கந்தன் திக்பிரமை பிடித்தாற்போல இருந்தான். மறுகணம் 'இது என்ன நிசமா 'சொப்பனம் காணறேனு! நானே கொலை செய்தவன். நீ உயிருடன் வந்தது!........'' என்று கந்தன் கூறிவதற்குள் கந்தா! ஏன் வீணுக்கொலை செய்தேன் என்று சொல்றே! நான் உண்மையாய் சாகவில்லை. ஆறிலே விழுந்தும் உயிர்த்தப்பணும் என்று விதியிருந்தால் தெய்வச்செயலாய் இருந்தால் அது தப்புமா? கந்தா! கவலைப் படாதே! நான் உயிருடன் தான் இருக்கிறேன். பூவாயியும் சாகவில்லை. ஆற்றிலே விழப்பட்ட என்னை தண்ணீ இழுத்திகிட்டு அடுத்த ஊருக்கு கரையோரம் சேர்த்துவிட்டது. தற்செயலாய் ஆறுக்கு வந்த இந்த டாக்டரய்யா தான் என்னை காப்பாத்திவிட மிக கஷ்டப்பட்டாரு. மறுதினம் நான் உன்னைப்பார்க்க ஊருக்கு ஓடியாந்தேன். அப்போவும் நீ வேணுமினு தண்ணீலே தள்ளி விட்டேனு நினைக்கவில்லை ஏதோ கைத்தவறுதலா என்னைப்பிடிக்கும் போது நான் விழுந்துட்டேனே என்று தோணிச்சு. ஆனு நான் விழுந்தும் நீ பார்க்காம கூக்குரல்கூட போடாம போனதால் சற்று ஏனே சந்தேகம் தட்டிச்சு. எதுக்கும் உன்னைப் பார்க்கறதாகத் தான் ஊர் ஓடியாந்தேன். ஆனு அன்னிக்கு ராவு உன்னைப்பார்த்துட்டு அழுதிட்டு ஓடியாந்த பூவாயியைப்பார்த்ததும் உன்னைப்பார்க்காம அந்த ஊரை விட்டே பூவாயி சொன்னபடி இந்த ஐயாகிட்ட ஓடியாந்து விட்டோம். ஆற்றில் தள்ளி விட்டதுமல்லாம உனக்கு என்னைப்பற்றித் தெரியாதுன்னயே அது எம்மாவருத்தமாயிருந்திச்சு தெரியுமா!........என்று பெருமூச்சுவிட்ட வேலு மேலே தொடர்ந்தான்.

பிறகு பூவாயியை கண்ணாலம் செய்துகிட்டு இந்த ஐயாவுடனேயே வேலைக்காரங்களாய் மூணு வருடமா இருக்கிறோம். உனக்கு பூவாயியை கண்ணாலம் செய்துக்க இஷ்டம்னு நீ அப்போதே என்னண்டை சொன்ன நான் என்னுதடையா செய்திருப்பேன்! ஏதோ........இப்படி........என்று வேலுமூடிப்பதற்குள் ''வேலு! பூவாயிக்குத்தகுந்தவன் நீ தான். என்னை மன்னிச்சுடு ....அறியாம தவறு செய்தேன். ஆனு நீ சொல்வது போல தெய்வம் உன்னை காப்பாத்திடிச்சு. நான் செய்த பாபத்துக்கு பரிகாரமா இத்தனை நாள் கஷ்டம் அனுபவிச்சுட்டேன். இனி கவலைவிட்டிருச்சு. ஆனு ஒண்ணு புரியல்லையா நீயும் பூவாயும் சந்தோஷமா நெடுங்காலம் நல்லா இருக்கணும் என்று சந்தோஷமாகக் கூறினன் கந்தன். மறுகணம் டாக்டர் புறம் திரும்பிய கந்தன் ''டாக்டரய்யா. வேலுவும் பூவாயும் உசிருடன் இருக்கிறது மிகச் சந்தோஷந்தான். ஆனல் இவன் மாதிரி பிசாசு வந்து தினதினமும் அதுவும் திங்கட்கிழமையானு ஒருநிமிடம் கூட விடாம என்னை துன்புறுத்தியதே! அது தாங்க எனக்குப்புரியல்லை. நிசமா அவன் போயிட்டானு! இப்போ பார்க்கிறது நடக்கிறது எல்லாம்!''....என்று மேலே பேசாது டாக்டரை ப்பரிதாபமாகப் பார்த்தான்.

கலகல என்று சிரித்த டாக்டர் ''கந்தா! நடப்பது தான் உண்மை நீ கனவுகாணவில்லை சுயநினைவுடன் தான் இருக்கிருய் பேயாவது பிசாசாவது அது உன்மனப்பிராந்தியின் விளைவு. நீ வேலுவை திங்கட்கிழமை கொலை செய்து விட்டதாகவும் அவன் மாண்டு விட்டதாகவும் உன் மனதில் ஊன்றிப்போய் விட்டதால் அதையே நினைத்து நீ பயந்தபடி இருந்ததால் அது இரவில் அப்படித்தோன்றி உன்னை துன்புறுத்தி வந்தது. எல்லாம் உன் மனப்பிரமையால் வந்ததுதான். கவலைப்படாதே வேலுவும் பூவாயியும் உண்மையில் வாழ்கிருர்கள். சாகவில்லை. இதோ இனி நீயும் மனப்பிரமை நீங்கி விட்டதால் புது வாழ்வு வாழ இறைவன் துணை புரியட்டும் என்ருர் டாக்டர்.



## அமுத வாக்கு.

முற்காலத்திலே இந்தியா செல்வத்துக்கும், கல்விக்கும், ஞானத்துக்கும், தியானத்துக்கும். பக்திக்கும், வீரத்துச்கும், பராக்கிரமத்துக்கும், சாஸ்திரங்களுக்கும் பலவிதமான கைத்தொழில்களுக்கும் விசேஷ ஸ்தலமாக விளங்கி வந்தது. இக்காலத்திலே இந்தியர் பஞ்சத்துக்கும், பசி மரணத்துக்கும், வறுமைக்கும், சிறுமைக்கும், தொத்து நோய்களுக்கும் சாசுவத ஸ்தலமாயிருக்கிறது.

# அன்புள்ள புதல்வி!

(நத்மல் தூகர்.)

இன்றையிலிருந்து நீ மங்கைப் பருவத்திற்கு அடுத்துள்ள, ஓர் சிறந்ததும், அவசியமுமான குடும்ப வாழ்க்கையில் பிரவேசித்துக் கொண்டு இருக்கிருய் இறைவன் அருளாலும் உன்னுடைய முன்னேர்களின் பூர்வ புண்ணியத்தாலும் உனக்கு ஓர் மிகச் சிறந்த, தகுந்த வாழ்க்கைத் துணைவர் கிடைத்திருக்கிருர். ஓர் கவி கூறியுள்ளபடி உன் கணவர் உயர் குலத்தவராகவும், நற்குணங்கள் நிறைந்து நல்ல கல்வி கற்றவராகவும், சமவயதுடையவராகவும் தாயார் தகப்பனுருடன் எல்லாவிதமான சுகங்களாலும், செல்வங்களாலும் நிறையப் பெற்றிருக்கிருர். திருமணம் உங்கள் ஜீவகால பரியந்தம் நற்சுகத்தையும், பரஸ்பர ஒற்றுமையையும், பரிபூர்ண சந்தோஷத்தையும் அளிக்கும் என்று நாங்கள் நம்புகிருேம்.

தர்மத்தின் அடிப்படைவணக்கம். வணக்கத்திலிருந்து தான் நல்ல விவேகம் ஏற்படுகிறது. குடும்ப வாழ்க்கையும் ஓர் தர்மந்தான். ஓர் வண்டிக்கு எவ்விதத்தில் இரண்டு சக்கிரங்கள் முக்கியமோ அவ்விதத்தில் வணக்கமும் விவேகமும் நல்வாழ்க்கைக்கு முக்கியமாக இருக்கிறது. குடும்ப வாழ்க்கை என்கிற ஓர் மாளிகைக்கு வணக்கம், விவேகம் என்னும் கான்கிரீட்டால் ஆன இரண்டு அஸ்திவாரங்கள் எனக் கூறலாம். நீ எவ்வளவுக்கெவ்வளவு வணக்கமுள்ளவளாகவும், விவேகியாகவும் இருக்கிருயோ அவ்வளவுக்கவ்வளவு உன் குடும்ப வாழ்க்கை ஆனந்தமளிக்கக் கூடியதாய் இருக்கும். உற்சாகமாக, விவேகத்துடன் கணவன் வீட்டார்களின் கட்டளைக்கு கீழ்படிந்து நடக்க வேண்டும்.

கல்லும் சிமெண்ட்டும் ஒன்ருகச் சேர்ந்து பயன் படக்கூடிய பொருளாக மாறத் தண்ணீர்வேண்டியிருக்கிறது. அதே தண்ணீர் பிறகு அவற்றை பயன் படாதபடி பிரிக்க முயற்சித்தால் அவைகள் அதற்கு இடம் கொடுப்பதில்லை. இம்மாதிரியே, உன் குடும்பத்தில் சண்டை சச்சரவு ஏற்படுத்துகிறவர்களையும், தகாதபேச்சு பேசபவர்களையும், கலக மூட்டுபவர்களையும் (அவர்கள் பெரியோராயினும் சிரியோராயினும்) அவர்களை உன் விவேகத்தால் உன் அருகில் நெருங்காவண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

மேலே சொன்னதின் பொருள் என்னவென்ருல் நல்லோரிடத்தில் நல்லவளாகவும் மிக வணக்கமுள்ளவளாகவும் இருக்கவேண்டும். ஆனல் தீயோரிடத்தில் பயங்கொள்ளியாக இராமல் பயமுறுத்துகிறவளாக இருக்க வேண்டும். ஏன் எனில் எங்கு பயமின்மை இருக்கிறதோ அங்குதான் உண்மை இருக்கிறது. எங்கு உண்மை இருக்கிறதோ அங்குதான் வணக்கமும் விவேகமும் சோபிக்கும்.

குடும்ப வாழக்கையில் வணக்கமும் விவேகமும் எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் உண்மையும் இனிமையயான பேச்சும். "எவன் நாவை அடக்கி தன் வசத்தில் வைத்திருக்கிருனே. உலகம் அவன் வசத்தில் இருக்கிறது" என்ற சிறந்த உபதேசத்தை நம் குரு அடிக்கடி போதிக்கிருர். இந்த உண்மையை நாம் அனுபவத்திலும் பார்த்திருக்கிருேம். ஆகையால் உன்னுடைய பேச்சிலும் குரலிலும்கூட இனிமை இருப்பது மிக அவசியம். இனிமையானதும் தன்மை வாய்ந்ததுமான பேச்சுதான் எல்லோருக்கும் விருப்பமாக இருக்கிறது. எல்லோரையும் சீக்கிரத்தில் வசீகரிக்கக்கூடிய உண்மையான மந்திரமாகவும் இருக்கிறது.

நம் குரு அவர்கள் கூறியுள்ளபடி இவ்வுபதேசத்தின் மற்ருெரு பொருளாவது ஆகாராதிகளிலும்கூட நாம் நாவை அடக்கி வசத்தில் வைத்துக் கொள்ளவேண்டியது என்பது. எவை நம் ஆரோக்கியத்திற்கு தக்கபடி தீமை விளைவிக்காமல் இருக்குமோ அவைகளையே நாம் உண்ணவேண்டும். குடும்பத்தில் உள்ள எல்லோரும் உண்டபின், உன் ஆரோக்கியத்திற்கு ஏற்றவாறு உணவை மிகச் சந்தோஷத்துடனும், நிதானமாகவும் சாப்பிடவேண்டும். இதனல் ஆகாரத்தினல் ஏற்படக்கூடிய சிறு சச்சரவுகள் ஏற்படாது. எவன் ஒருவன் எல்லோருக்கும் உணவளித்துவிட்டு பிறகு தான் சாப்பிடுகிருனே அவனுடைய சுகத்திற்கும் ஆனந்தத்திற்கும் அளவேயில்லை. இது தான் தர்மத்தின் அடிப்படை. இதை ஒரே வாக்கியத்தில் சுருங்கக் கூறினல் "தீமை பேசாதே; தீமையளிப்பதை உண்ணுதே" மனமும் வாக்கும் பரிசுத்தமாக இருக்க இதுவே உண்மை வழி

நல்லொழுக்கம் உள்ளவளாக இருக்கவேண்டுமானல் நற்குணங்களால் நிறையப் பெற்றிருக்கவேண்டும். இங்கே உனக்கு நல்லொழுக்கம் என்பதின் முக்கிய பொருளை விளக்க விரும்புகிருேம். அதாவது உன் கணவருடன் மனப்பூர்வமாக பேசவும், பழகவும், சிரித்து விளையாடவும், பஹிரங்கமாகவும் ஏகாந்தமாகவும் இருக்க உரிமையுண்டு. ஆனல் வேறு எந்த ஆண் மகனுடனும் தனிமையாகப் பேசவோ அல்லது சிரித்து விளையாட நினைப்பதோ தர்மமில்லை. ஆனல் அவர்களிடத்தில் பெரியோர்களின் முன்னிலையில் இருந்து கொண்டு நேராக அவர்களை பார்க்காமல் மிக மரியாதையுடன் பேசவும் கேட்கவும் வேண்டும். இதுதான் தர்மம். இது தான் பதிவிரதா தர்மமும் ஆகும்.

மனதை எவ்வளவு பரிசுத்தமான நிலையில் வைத்துக் கொள்ள வேண்டுமோ அதே போல் சரீரத்தையும் சுத்தமாகவும் சௌந்தர்யமாகவும் வைத்துக்கொள்வது முக்கிய கடமை. சரீரம் சுத்தம் இல்லையேல் மனமும் நிர்மலமாக இருக்காது. இதற்காக ஆடம்பரமான ஆடைகளிலும், அலங்காரத்திலும் நேரத்தை வீணுக்கவேண்டும் என்ற அர்த்தமில்லை. நம் குடும்பத்திற்கும் உன் அந்தஸ்திற்கும் ஏற்றவாறு முக்கியமாக உன் கணவன் எதிரில் உன்னுடைய கூந்தல், முகம் முதலியவற்றை அலங்கரித்து வைத்துக்கொள்வதே உன் முக்கிய கடமையாகக் கருது. அசுத்தமாக இருப்பது ஓர் பெரிய பாபமாகும். அதனல் எல்லா இடங்களிலும் அகௌரவம் ஏற்பட்டு பிறருடைய வெறுப்புக்கு பாத்திரமாகவும் ஆகிவிடுகிருய். ஆகையால் அவ்வாறின்றி உன் வாழ்க்கையை சீர் செய்துகொள். உன் சரீரத்தையும் பற்கள் மூக்கு கண்கள், காதுகள், நகங்கள் முதலியவற்றில் அசுத்தம் சேராமல் பார்த்துக்கொள். காலையில் எழுந்ததும் உன் காலைக் கடனை முடித்துக்கொள். பிறகு கை, முகம் முதலியவற்றை சுத்தம் செய்து கொண்டு கடவுள் வணக்கத்தை செய்வது அத்யாவசியமாகும். இதன் பிறகு பெரியோர்களை நமஸ்கரித்துக் கொள்.

(தொடரும்)

(4-ம் பக்கம் தொடர்ச்சி)

"அமெரிக்கர்கள் குழந்தைகளுக்கு விளையாட்டுக் கருவிகள் வாங்கித் தருவதைப் பண விரயம் என்று கருதுவதேயில்லை. அவைகளையும் கல்விக்கு ஆதாரம் என்றே அவர்கள் கருதுகிறார்கள்."

ஆர். காந்திமதி "கதிர்மலர்"

"நம் பெற்றோர்களும் விளையாட்டுக் கருவிகள் வாங்கித் தருவதை ஆதரிக்கத்தான் செய்கிறார்கள்—ஆனால் வாங்கித் தருகிறவர்களாக அவர்கள் இருக்க விரும்புவதில்லை!"

⁘ ⁘

இந்தக் காலத்தில் அநேகமாக ஒவ்வொரு பெற்றோரும் தங்கள் பெண் மேடைக் கச்சேரி செய்யவேண்டும், குறைந்தபட்சம் ரேடியோவிலாவது பாடிவிடவேண்டும் என்று தான் விரும்புகிறார்கள்."

—எஸ். வைத்யநாதன் 'கதிர் மலர்'

"பத்திரிகைகள் கலைநிகழ்ச்சிக் குறிப்புக்கள், போட்டோ பிரசுரங்கள் ரேடியோ விமர்சனங்கள் இருக்கும்போது இந்த ஆசை வளருவது சகஜந்தானே!"

⁘ ⁘

"இந்த "அம்மா," வார்த்தைப் பைத்தியம் உலகத்தில் இந்தியாவில்தான் அதிகம் தான் பிறந்த தேசத்தை மற்றவர்கள் யாரும் "தாய் நாடு" என்று குறிப்பிடுவதில்லை. இங்கேதான் (நம் நாட்டில் தான்) அந்த வார்த்தையை உபயோகிக்கிறோம்!"

—'துமிலன்' கதிர் மலர்

"அம்மா! பாரம்மா!" இந்த மாமா சொல்றதை!"

"மக்களுக்கு விருப்பமான பகுதிகளையும் ஒன்றிரண்டு சேர்த்தால் என்ன என்று யோசிக்கும் வழக்கம் பத்திரிகாசிரியரிடம் முன்பு இருந்தது. இப்போது மக்களுக்கு விருப்பமான பகுதிகளைத் தவிர வேறு ஒன்றையும் சேர்க்கலாகாது என்ற பழக்கம் கொடிகட்டிப் பறக்கிறது!"

தலையங்கம்—குமுதம் 1—11—57 இதழ்

"ஆமாம்! இல்லையானால் சுமார் 80 வருஷங்களாகப் பத்திரிகைத் தொண்டில் அனுபவமுள்ளவர்கள்கூட தினத்தந்தி பாணியைப் பின்பற்றுவார்களா?"

⁘ ⁘

## சிவாஜி மலரில்

"கடந்துவந்த இரண்டு காவதங்களும் மூன்று கற்களும் நெடிய பாதைதான், எத்தனையோ இடர்ப்பாடுகளையும் கடந்து வெகுதொலை முன்னேறிவிட்டோம் என்பதில் ஒரு நிறைவு—எதிரே வெள்ளிக் கோபுரத்தின் கனவு."

—திருலோக-சீதாராம்

"ஆசிரியரே! கனவு எதிரே காணுகிறதென்றால் அது நனவல்லவா? கொஞ்சம் பொறு கொஞ்சம் பொறு என்று வெள்ளிமலைவரைக்கும் அழைத்து வந்துவிட்டீர்; அந்தப் பகுதியில் தானே தங்கச் சிகரம் இருக்கிறது!"

✱ ✱

"அறிவு ஒரு அளவு தான் நமக்கு உபயோகப்படும்; அதற்கு அப்பால் நமக்கு நம்பிக்கைதான் வேண்டும்!"

—நா. சிதம்பரசுப்ரமண்யன்

"ஆமாம்!" ஆனால் நம்பிக்கை "பாட்டரி" சீக்கிரம் தீர்ந்து போய் விடுகிறதே!

⁘ ⁘

"சென்னை ராஜ்யத்தில் விதிக்கப்படும் மோட்டார் வாகனவரி உலகிலேயே மிகப் பளுவானது என்று சொல்லப்படுகிறது!

—எஸ். ஆரோக்யசாமி.

"அதனால் தான் சென்னையில் வரிகனத்தோடு வாடிக்கைக்காரர்களையும் சுமக்க முடியாமல் அந்தக் காடிகள் அடிக்கடி நின்று போய்விடுகின்றன!"

⁘ ⁘

"புதிதாகச் சிந்தனை செய்வதற்கு என்ன இருக்கிறது? எவ்வளவு கடுமையாகச் சிந்தித்தாலும் அதன் முடிவை நமக்கு முந்தி யாரோ ஒருவன் கண்டு எழுதி வைத்திருப்பான்....உண்டா இல்லையா?"

—எம். வி. வெங்கட்ராம்.

"சிந்தனை வழிகளை மாற்றிக் கொண்டால் போகிறது; என்ன எழுதலாம் என்பதை "எதிலிருந்து" என்று மாற்றிக்கொள்ள வேண்டும்—அவ்வளவுதானே!"

⁘ ⁘

"வானநதியில் நீந்தும்
நிலவே
வண்ண முகத்தை மறைத்
திடலாமோ?"

—"சோமு"

மானம் விட்டு மனிதன் வாழ
முனைந்த தனால் நாணு கின்
றேன்.

⁘ ⁘

"சின்ன வயதில் நீங்களும் இப்படித்தான் படுத்துவீர்கள் என்று சொல்லிக்கொள்கிறார்கள். ஆகையால் நீங்களாவது என்மேல் அனுதாபப்படுவீர்களென்று........

— லதா எழுதுகிறாள்.

"அனுதாபப்படுவதா?....... பொறுமையல்லவோ படுகிறோம். குழந்தைப்பருவத்திலேயே மலருக்கெழுதுகிறுயே! பேஷ்!

⁘ ⁘

தமிழிலே காணுதவைகளை ஸம்ஸ்கிருதத்திலும் இரண்டிலும் பார்க்கப்படாதவைகளை ஆங்கிலத்திலும் பாரதியார் உணர்ந்து உற்சாக மடைந்தார்"

—கி. சந்திரசேகரன்.

"எதையும் தமிழுக்குள்ளேயே தேடுவதுதான் இன்றையப் **பண்பாடு**.

⁘ ⁘

"இந்தியா போன்ற நாட்டிலே (பெண்கள்) மனைவிளக்காய் இருந்தார்களே தவிர தெருவிளக்காக மாறத்தைரியமில்லை; இந்த நூற்றாண்டில் இங்கும் மனைவிளக்குகள் நடுவீதிக்கு வந்து விட்டனர்."

—"சுகி"

"வீட்டுப் பெண்கள் நாட்டுப் பெண்களாகிவிட்டதால் மனைவிளக்கையும் குலவிளக்கையும் கூட இனிச் சர்க்காரிடம் கோரித்தான் பெறவேண்டும் என்கிற நிலை வந்தாலும் வரலாம்!"

⁘ ⁘

"விளம்பரம் ஏன்?
—ஏனென்றால்........"

—ரா. பார்த்தசாரதி.

"வடக்கே இமயமலை இருக்கிறது; ஆகையால் "குமரிமுனை" மார்க் குடைகளையே வாங்க வேண்டும்.

⁘ ⁘

"உண்மையில் நான் நல்லவன்; ஊரைப்பார்த்துக் கெட்டவன்

—ரெட்டியார்.

"உங்களைப்பார்த்து" என்று சொன்னாலும் நாங்கள் கோபிக்கமாட்டோமே!

⁘ ⁘

வருடா வருடம் எல்லாப் பத்திரிகைகளும் பலருடைய சிந்தனைகளை ஒன்று சேர்த்துக் கலையழகுடன் மலர் என்ற பெயரில் வெளியிட்டு வருகிறார்கள்.

—அ. வெ. ர. கி.

இந்தத் தடவை நீங்கள் வெளியிட்டுள்ள—

.: .:

"உலகில் சமாதானம் பரவ, இந்தியாவின் சேவை இனி வரும் நாட்களில் நிச்சயமாக அதிகரிக்கும் என்று எதிர் பார்க்கலாம்"

—முதன்மந்திரி கே. காமராஜ்
விகடன் மலரில்

"ஆனால் உள்ளூரில் சமாதானத்தை நிலை நாட்ட அமெரிக்காவிலிருந்து சமாதான உதவி வந்து சேர்ந்தாலும் சேரலாம்!"

.: .:

"ஒற்றுமை உணர்ச்சி நிலைத்திருக்க வேண்டுமானால் மக்களின் உள்ளங்களில் அது தானாகவே மலர வேண்டும்"

—ஆந்திர முதன்மந்திரி
ஸ்ரீ. என் சஞ்சீவி ரெட்டி

"மலர்ந்த உணர்ச்சியில் நறுமணம் கமழ வேண்டுமானால் சர்க்காரின் கிருபாகடாக்ஷம் அதன் மீது விழாமலுமிருக்க வேண்டும."

.: .:

1) "மைசூரும் சென்னையும் கேரளத்துக்கு அண்டை நாடுகள் ஆனால் கேரளமிருக்கும் மண்டலத்தில் மைசூர் இல்லை.

2) "மைசூருக்கருகில் கேரளம், சென்னை, பம்பாய், ஆந்திரா,—ஆனால் மைசூர் இருக்கும் மண்டலத்தில் சென்னையுமில்லை—ஆந்திரமுமில்லை

3) ஆந்திராவுக்கருகில் சென்னை, மைசூர், பம்பாய், மத்தியபிரதேசம், ஒரிஸ்ஸா.

ஆனால் இந்த ஐந்தில் சென்னை மட்டுமே ஆந்திர மண்டலத்திலிருக்கிறது— இன்னொரு அதிசயம் ஆந்திரமண்டலத்தில் எட்டாக்கையிலிருக்கும் கேரளம் இழுத்துவைக்கப்பட்டிருக்கிறது,

—கேரள முதன் மந்திரி
நம்பூதிரிபாத்.

இப்படியெல்லாம் பாடுபட்டுப் பிரித்தும் ஒரு வேளை நம் மக்கள் ஒற்றுமையாக வாழ முடிந்து விட்டால் அப்போது நாம் யாரை வாழ்த்துவது?

.: .:

"குறைகளை உணர்வது நல்லது; உணர்ந்து திருந்துவது நல்லது; மேலும் முன்னேறுவதற்கு அதுவே வழியாகும்"

—மு வரதராசனர்

"குறைகள் பிறருடையவை என்கிற வரைக்கும் இதில் அபிப்பிராய பேதத்துக்கே இடமில்லையே!"

.: .:

"மனிதன் நன்மை தீமை என்ற இரண்டும் கலந்தவன்."

—அ. ச. ஞான சம்பந்தன்.

"தன்னைப் பொறுத்தவரையில் தீமை கலவாத நன்மையையும் பிறருக்கு நன்மைகலவாத தீமையையும் பிரித்துக் கொடுப்பதில் மனிதன் சமர்த்தன்.

.: .: .:



12—11—57 மாலை சென்னை அண்ணாமலை மன்றத்தில் சென்னை தமிழ்எழுத்தாளர் சங்க ஆதரவில் டாக்டர் **ஸி. பி. இராமஸ்வாமி அய்யர்** அவர்கள் அரிய தலைமையில் சென்னை தி லிட்டில் ப்ளவர் கம்பெனியார் வெளியிட்டிருக்கும் "லிப்கோ 64 குறைந்த விலைச் சிறு பதிப்புகள்" அறிமுக விழாவில் கம்பெனியின் கௌரவ ஆலோசகர் **ஸ்ரீ வ. கிருஷ்ணஸ்வாமி சர்மா** அவர்கள் பேசியபோது எடுத்த படம். தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் **ஸ்ரீ ஏ. ஜி. வெங்கடாச்சாரியார், ஸ்ரீ ராஜாஜி,** டாக்டர் **ஸி. பி. ஸ்ரீ. கி. வா. ஜகந்நாதன்,** பிரதம நீதிபதி **ஸ்ரீ பி. ராஜகோபாலன்** ஆகியோரையும் காணலாம்.

## கமலா விதை

பூனா தேசீய ரசாயன ஆராய்ச்சிச்சாலை கமலா விதை எண்ணெயை வார்னீஷ்களுக்கும், வர்ணங்களுக்கும் உபயோகிப்பதற்கு ஏற்ற பக்குவ முறைகளை உருவாக்கியிருக்கிறது.

இந்தியாவில் கமலா விதை ஏராளமாகக் கிடைக்கிறது. அதன் எண்ணெய் சுலபமாக உலரக் கூடியது. ஆனால் இதர ஆவிஎண்ணெய்களைவிடகமலா எண்ணெய் சீக்கிரமாக கெட்டிப்பட்டுவிடுகிறது. ஆனால் அதை வார்னீஷ் முதலிய பூச்சுப் பொருள்களுக்கு உபயோகிக்க முடியவில்லை,



## பௌண்டன் பேனு

"பௌண்டன் பேனு" மை தயாரிப்பதற்கான திட்டமொன்றை இந்திய சர்க்கார் வர்த்தகத் தொழிலியல் மந்திராலயத்தைச் சேர்ந்த சிறு தொழில்கள் ஸ்தாபனம் உருவாக்கியிருக்கிறது. சிறிய தொழில் ஸ்தாபனங்கள் கையாளுவதற்கேற்ற ஒரு திட்டம் அது. அந்த மை தயாரிக்கும் வேலை முறையை அந்த ஸ்தாபனம் ஒரு சிறு பிரசுரத்தில் விளக்கியிருக்கிறது. மூலப்பொருள்கள், யந்திர சாதனங்கள், முதலீடு, செலவு பதிப்பு முதலியவை அதில் தரப்பட்டுள்ளன, பரிசோதனை முறை மையின் தன்மைகள் குறைபாடுகள், அவைகளுக்கான காரணங்கள், அவைகளை நீக்கும் வழிகள் முதலியவை அதில் விவரிக்கப்பட்டுள்ளன.

இந்தியாவில் "பௌண்டன் பேனு" மை தயாரிப்பு அதிகரித்துள்ள போதிலும் ஓரளவுக்கு இன்னும் அது இறக்குமதி செய்யப்பட்டு வருகிறது. 1955—ல் உற்பத்தி 7,43,000 டஜன் 2 அவுன்ஸ் புட்டிகள்; 1953-ல் உற்பத்தி 5,33,600 டஜன் புட்டிகள். இறக்குமதியை அவசியமில்லாமல் செய்வதற்காகவே உள்நாட்டு உற்பத்தியை அதிகரிக்க முயற்சி செய்யப்படுகிறது. இத்திட்டம் பலன் தரும் என்றும் நம்பப்படுகிறது.

.: .:

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

"தேன் தங்கி, தித்தித்து, அமுது ஊறித்
தான் தெளிந்து அங்கு
ஊன் தங்கி நின்று உருக்கும் உத்தர
கோசமங்கைக் கரசன்."
தேனாய், இன்னமுதமாய், தித்திக்கும்,
சிவபெருமான்."

ஊனை உருக்கிய பின்னர் அமுதம், மயிர்க்கால்களிலும், நாடி நரம்புகளிலும் பாய்ந்து பசுமையாக்கும் காட்சி! ஊனையும், நரம்பையும், நாடியையும், உருவாக்கு முன்னால், மனம் என்னும் பாறையை "மருந்து" வைத்து உடைக்கவேண்டும், அந்த மருந்தே "ஐந்தெழுத்துப்படி" அதைக்கொண்டு இறைஞ்சுதலையே, அழுதல் என்பர்! அழுதல், கரைதல் ஒரு பொருளாம்! கரைதல் எதற்காக? உடலை ஒளியுடன் கரைப்பதற்காக!

"ஊன்வந்து ரோமங்களுள்ளே
உயிர்ப்பெய்து
தேன்வந்து அமுதின் தெளிவின்
ஒளிவந்த
வான்வந்த வார்கழல்" என்கிறார்.

இந்த நிலை பெற,
"வினையேன் அழுதால் உனைப்பெறலாமே", எனவும்,
"அழுகேன் நின்பாலன்பா மனமாய்", எனவும்,
"அடியேன் அயலே மயல் கொண்டழுகேனே"
இதையே, பிறிதோரிடத்தில் மாணிக்கவாசகர்,

"நெக்கு நெக்கு உள்ளுருகி உருகி
நின்றும், இருந்தும், கிடந்தும், எழுந்தும்,
நக்கு மழுதும் தொழுதும் வாழ்த்தி
நானா விதத்தாற் கூத்து நவிற்றிச்
செக்கர் போலும் திருமேனி திகழ
நோக்கிச் சிலிர் சிலிர்த்துப்
புக்கு நிற்பதென்று கொல்லோ என
பொல்லா மணியைப் புணர்ந்தே!"

இந்தத் திருவாசகம் பலகாலும் படித்துப் பயின்று பேரொளியானவர் சித்தர் ராமலிங்க வள்ளலார்! அவர் தம் லட்சிய முழக்கத்தை, மணிவாசகரின் குரலை, அருட்பாவின் கேந்திரமான பாடலைப் பாருங்கள்! அருட்பாவின் கருவைக் காணுங்கள்?

"நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து
நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்றெழும் கண்ணீர்தனுலுடம்பு
நனைந்து நனைந்து நல்நிதியே இன்னமுதே ஞான
நடத்தரசே என்னுரிமை நாயகனே யென்று
வனைந்து வனைந்து ஏத்துதும் நாம் வம்மின் உலகியலீர்
மரணமிலாப் பெருவாழ்வின் வாழ்ந்திடலாங் கண்டீர்
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ் சொல்
கிறேன்
பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருண மிதுவே."

அழுதழுது, பழமலங்களைக் களைந்து, மனமாசகற்றி' பழுதற்ற உடலடைந்து பழச்சுவை யுண்டவர் ராமலிங்கனர்! மணிவாசகரின் வார்சு;

இவ்வாறு, அழுவதே, உருகுவதே, இரும்பு நெஞ்சத்தை இளகச் செய்யும் வழி!

இதையே, ஞானசம்பந்தப் பெருமான்,

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
யோதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப் பொருளாவது
நாதனை நமச்சிவாயவே" என்றும்,

"இயமன் தூதரும் அஞ்சுவர்" என்றும் தெளிவுரை வழங்குகின்றார்!

மனம், என்பது கல்லைப்போலக் கடினமானது. அதை இளகச் செய்வது, கனியாக்கும் நிலைபெற்றது ஐந்தெழுத்துப் படியென்கிறார் சம்பந்தனர்! அதையே, மணிவாசகரும் கூறுகின்றார்!

"கல்லைப் பிசைந்து கனியாக்கி தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனை
தில்லை நகர்புக்குச் சிற்றம்பல மென்னு
மொல்லை விடையானைப் பாடுதுங் காணம்மானாய்"
என்றும்,

"ஓயாதே உள்குவாருள்ளிருக்கு முள்ளானை"
என்றும்,

"கன்னெஞ் சுருக்கிக் கருணையி லாண்டுகொண்ட
அன்னம் திளைக்கும் மணிதில்லை யம்பலவன்"
என்றும்.

"கற்போலு நெஞ்சங் கசிந்துருகக் கருணையினு
னிற்பானைப் போல வென்னெஞ்சினுள்ளே
புகுந்தருளி"
என்றும்,

இவ்வாருக மனதை, கருங்கற்பாறை மனதைக் கனியாக்கி, அதைக் கயிருக்கி, இறைவன் திருப்பாதத்திலே கட்டிவிடுகின்றார்! "தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந் தர்க்கல்லால், மனக்கவலை மாற்றலரிதல்லவா?"

"சித்தமெனும் திண்கயிற்றால் திருப்பாதம்
கட்டுவித்த
வித்தகனர் விளையாடல் விளங்கு தில்லை
கண்டேனே!"

தில்லை யென்பது அறிவின் எல்லை! தில்லை வெளிகண்ட பின்னர் ஏற்படும் நிலை சமாதிநிலை! பேரானந்த நிலை! ஒளிநிலை! அமுதம் உண்டபின் சாவேது!

ஊனை உருக்கி, உரோமங்கள்தோறும் அமுதம் பாய்ந்து சித்தம் கசிந்து கனியான பின்னர் எலும்பை உருக்குவதைப் பற்றிப் பாடுகின்றார் மணிவாசகர்;

எலும்பை சமஸ்கிருதத்தில் "அஸ்தி" என்று கூறுவார்கள்! உலகத்தில் வாழ "ஆஸ்தி" அல்லது சொத்து எவ்வளவு பிரதானமோ அவ்வளவு பிரதானமானது உடலுக்கு "அஸ்தி" அல்லது எலும்பு. ஆகவே, இறைவனும், இறைவியும் எலும்பை, தலைமாலையை அணிந்துள்ளனர்! இதன் தத்துவார்த்தத்தைப் பார்ப்போம்!

ஞானகங்கையாம், தலையிலிருந்து ஓடிவரும் பாலமுதத்தால் ஊனை உருக்கி, எலும்புத் துளைகளிலேயும் ஏற்றி, எலும்பை நீருக்கி, எலும்பனைத்தையும் ஒளியாக்கி, அமுதத்திலேயே கரைத்து வருவதையே "அஸ்தி கரைப்பது" என்ற சடங்கின் உண்மை தத்துவமாகும்! அதைவிட்டு, சுடுகாட்டில் சிதறியுள்ள எலும்பைப் பொறுக்கிச் சட்டிகளிலிட்டு காவிரியிலும், அமராவதியிலும், கோதாவரியிலும், கங்கையிலும் கொண்டுபோய் கரைத்து விடுவதல்ல! இதனால் முக்தி என்னும் விடுதலை கிடைத்துவிடாது!

இந்த "அஸ்தி" கரைக்கும் வைபவத்தைத் திருவாசகத்தில் பார்ப்போம்!

"இரும்புதரு மனத்தேனை யீர்த்து யீர்த்து என்
என்புருக்கிக்
கரும்பு தருசுவை எனக்குக் காட்டி"

இரும்பு மனத்தைக் காந்தமென இழுத்து, இழுத்து, எலும்பையெல்லாம் உருக்கிக் கரைத்தபின் கிடைத்த இன்பம் கரும்பிலிருந்து கிடைக்கும் சுவை போன்றதாகும் என்கிறார்!

"ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா வானந்தமாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வம்", மேலும் என்ன அற்புதம் விளைவிக்கின்றதென்பதை மணி வார்த்தையில் கேட்போம்!

(தொடரும்)

# கோர்ட் விளம்பரங்கள்

### அரியலூர் டி. மு. கோர்ட்

S. C. 772/57.

K. S. பக்கிரிசாமி முதலியார்
—வாதி

2. சுந்திரமூர்த்திபடை
யாச்சி

3. மாரிமுத்துப் படை
யாச்சி
—2, 3 defts

ஷை கேசில் வாதி 20-6-51௨ ஏற்பட்ட பிராம்சரி நோட்டின் பேரில் ரூ. 132-1-6 கிடைக்க தாவா செய்து 2, 3,பிரதிவாதிகளின் சம்மன்களைஒட்டி சார்வுசெய்யவும் பப்ளிகேஷனுக்கும் உத்திரவாகி 7-12-57௨ ஈரங்கி வைக்கப்பட்டிருக்கிற விஷயம் இதன் மூலம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது ஆஜராகி ஆக்ஷேபணையிருந்தால் ஷை தேதியில் தெரிவித்துக்கொள்ளலாம்.

(Sd) N. V. Krishnaswami
ayyangar
Advocate

### திருச்சி டி. மு. கோர்ட்

I. A. 420/57 I. A. 320/57
O. S. 564/56

மா. வெ. குப்புசாமி
செட்டியார்—வாதி

A. M. ஜெயினுல்லாபதீன்
ரூவுத்தர்—பிரதிவாதி

ஷை வாதி, பிரதிவாதிக்கு தெரிவிப்பது

என்ன வென்றால் ஷை நம்பரில் பைனல் டிகிரி, பாஸ் செய்யவும், ரிசீவர் நியமிக்க வேணுமாய் மனு கொடுத்து நோட்டீஸ் கெடு 4-12-57௨ போடப்பட்டிருக்கிறதை இதன் மூலம் தெரியப்படுத்தி இருக்கிறது

வி. பி. கணேசன்
வாதியின் வக்கீல்.

### துறையூர் டி. மு. கோர்ட்

O. S No 341/1957

பொன்னம்மாள்—வாதி
ரெங்கசாமி ரெட்டி
—பிரதிவாதி

நோட்டீஸ்

தாவா சொத்து சுவாதீனத்துக்கும் பிந்திய மத்ய கால வருபடி கிடைக்கவும் தாவா செய்து 28—11—57ல் கெடு வைத்திருக்கிறது என்பதை அறியவும்.

(Sd.) R. T. வரதருஜன்.
அட்வகேட்.
துறையூர்.

### திருச்சி டி. மு. கோர்ட்

O.S. 642/1956 E P. 585/1957

அய்யாவு முத்திரியர்—வாதி
ரெங்கசாமி முத்திரியர்
—பிரதிவாதி

ஷை நம்பர் பிரதிவாதிக்கு
நோட்டீஸ்

ஷை நம்பரில் ஏல இஸ்தியாரின் ஷரத்துக்களை நிஷ்கரிஷை செய்ய 21-11-57௨ ஈரங்கி போடப்பட்டிருக்கிறது அறியவும்.

எம். எஸ். சுந்தரராஜன்.
அட்வகேட்.

### திருச்சி டி. மு. கோர்ட்

S. C. 1424/1957

லெக்ஷ்மண அய்யர்—வாதி
பெருமாள்மளவரார்
—பிரதிவாதி

ஷை பிரதிவாதிக்கு நோட்டீஸ்

ஷை நெம்பரில் பிரதிவாதி பேரில், புரோநோட்டுப்படி ரூ. 325—91 பின்வட்டி சிலவு வகையரு கிடைக்க வாதி தாவா செய்து 25-11-57௨ முற்பகல் 11 மணிக்கு ஈரங்கி போடப்பட்டிருக்கிறது.

எம். எஸ். சுந்தரராஜன்
அட்வகேட்.

### திருச்சி சப் கோர்ட்

O. S. 84/56. I. A. 147/57.

தங்கராசு கவுண்டர்
—மனுதார் வாதி

Vs

1. சீதாபதி ராவ்
2. கருப்பண்ண பிள்ளை
3. கருப்பண்ண மூப்பன்
4. திருவேங்கடம் பிள்ளை

—எதிர் மனுதார்கள்
பிரதிவாதிகள்

ஷை நம்பரில் ஏற்பட்ட ஈட்டு டிக்ரியை பைனல் டிக்ரி செய்ய வாதி மனு கொடுத்து 19—11—57௨ வாய்தா போடப்பட்டிருக்கின்றது. பிரதிவாதிகள் தங்கள் ஆக்ஷேபணைகளை அன்று தெறிவித்துக் கொள்ளலாம்.

G. Balasundaram B A , B L ,
Advocate.

### குளித்தலை டி. மு. கோர்ட்

S. C. No. 608/57

மருதமுத்து சோழயர்—வாதி
சங்க கவண்டன்—பிரதிவாதி

ஷை நம்பர் பிரதிவாதிக்கு
தெரிவிப்பதாவது.

ஷை நம்பர் வாதி உம் பேரில் புரோநோட்டபடி ரூ. 270—75 கிடைக்க தாவா செய்து நாளது 20—11—57-௨ ஈரங்கி. அன்று உம் ஆக்ஷேபணையை கோர்ட்டில் தெரிவித்துக்கொள்ளாவிடில் ஷை தாவா expartee ஆக தீர்மானமாகும்.

(ஒம்) R. வெங்கடராம நாயுடு
வாதி அட்வகேட்.

### திருச்சி டி. மு. கோர்ட்

S. C. 664/57.

R. ரூஜகோபால் நாயுடு—
வாதி

A. ரூமசாமி கவுண்டர்—
பிரதிவாதி

ஷை பிரதி வாதிக்கு தெரிவிப்பது,

வாதி, பிரதிவாதி பேரில், புரோ நோட்டுப்படி ரூ 108-12-0 க்கும் அதன் சிலவுக்கும் தாவா துடர்ந்து ஷை தாவா 29-11-57 தேதி விசாரணைக்குப் போடப்பட்டிருக்கிறது என்பதை இதன் மூலம் அறியவும்

K. R. Avadhani
Advocate for plaintiff

### மாயவரம் டி. மு. கோர்ட்

O. P. 54/57

சாமிநதய்யர்—மனுதார்
ரூஜம்மாள்—எதிர் மனுதார்

ஷை நம்பர் மனுதார் அட்வகேட் M. K. ரூமாமிர்தய்யர் தெரிவிப்பது.

மா. டி. மு. லாக்கா விஷ்ணுபுரத்தில் ஸ்திரவாசமாக இருந்து இறந்துபோன சீனிவாஸய்யருக்கு வரவேண்டிய லேவாதேவி துகைகளை வசூலித்தடைய மனுதார் தனக்கு வார்சு சர்ட்டிபிக்கட் கிடைக்க வேணுமாய் மாயவரம் டி. மு. கோர்ட்டில் மனு கொடுத்து நோட்டீஸுக்கு உத்திரவாகி 28—11—57௨ கெடுபோடப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணை உள்ளவர்கள் ஷை கெடுவில் ஆஜருகி தெரிவித்துக்கொள்ளவும். தவறினுல் மனுப்படி உத்திரவாகிவிடும்.

M. K. ரூமாமிர்தய்யர்,
அட்வகேட்
மாயவரம்.



Edited and Published by Thiruloka Sitharam for the Shivaji Private Ltd and Printed by A.V.R. Krishnasami at Kannan Press, Tiruchy-2